[20th March 1961

வேண்டுமென்று சொல்லுகிறார்கள். இந்தப் பிரச்னைக்கும் கேள்வியிலே உள்ள பிரச்னைக்கும் சம்பந்தம் ஒன்றும் கிடையாது. உரிமை ஒன்றும் பறிபோக வில்லை. இதன் மூலமாக கொடுக்கப்படுகிற பணம் வருஷத்திற்கு 2 லட்சம் ரூபாய் ஆகிறது. வேண்டாமென்று சொல்லிவிட்டால் அவர்களுக்குத்தேவையான பணம் எப்போது தேவையோ அப்போது கொடுக்கிறோம்.

*Agricultural loans (rate of interest)*

* 948.*Q.*—Sri A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விவசாய கடன்களுக்கு வட்டி விகிதத்தைக் குறைக்கவேண்டுமென்று நில அடமான பாங்கு மகாநாட்டில் வற்புறுத்தப்பட்டதா ?

(இ) அதன்பேரில் அரசாங்கம் எடுத்துக்கொண்டிருக்கும் நடவடிக்கை என்ன ?

The Hon. Sri R. VENKATARAMAN : (அ) Yes, Sir.

(இ) The proposals are under the consideration of Government.

Sri A. VEDARATHNAM : இப்போது அரசாங்கம் விவசாயிகளிடமிருந்து என்ன வட்டி வசூலிக்கிறார்கள். இப்பொழுது கொடுக்கப்படும் மார்ஜினை கொஞ்சம் குறைத்துக்கொண்டு வசூலிக்க முன் வருவார்களா ?

The Hon. Sri R. VENKATARAMAN : நில அடமான பாங்கு பார்த்தே $6\frac{3}{4}$ சத விகிதம் மக்களிடத்தில் வசூல் செய்கிறது. $\frac{1}{2}$ சத விகிதம் குறைக்கவேண்டுமென்று மாநாட்டிலே தீர்மானம் போட்டு கேட்டிருக்கிறார்கள். $\frac{1}{2}$ சத விகிதம் குறைப்பதற்கு உத்தியோகஸ்தர்கள் சம்பளத்தை அவர்களே ஏற்றுக்கொள்ளவேண்டுமென்ற கருத்தை தெரிவித்தார்கள். சர்க்கார் சம்பளம் பூராவையும் ஏற்றுக்கொண்டாலும்கூட 9 லட்சம் ரூபாய் இப்போது உதவி வரும். $\frac{1}{2}$ சத விகிதம் குறைத்தால் 24 லட்சம் ரூபாய் மேற்கொண்டு குறைந்துவிடும்.

*Settlement Inspectors (Thanjavur)*

* 949 *Q.*—Sri M. P. SARATHI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் தஞ்சை செட்டில்மெண்ட் பிரிவில், செட்டில்மெண்ட் இன்ஸ்பெக்டராகப் பணியாற்ற அரசாங்கச் செலவில் எத்தனை தற்காலிக ஊழியர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது ?

(இ) பயிற்சி பெற்ற ஊழியர்கள் வேலையின்மை காரணமாக நிறுத்தபட்டுள்ளனரா ?

(உ) பயிற்சி பெறாத ஊழியர் பணி புரிகின்றனரா ?

(எ) (இ), (உ) இனங்களில் முறையே எத்தனை பேர் ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (அ) No temporary Settlement Inspector was trained at Government cost in the year 1960 to serve in Settlement Party No. III, Thanjavur.

(இ) No, Sir.

(உ) & (எ) Yes, Sir. There are 70 untrained Settlement Inspectors in Settlement Party No. III, Thanjavur. They are not put on field work.